7th April 1958]

வேலையிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களைத் திருப்பி வேலையில் வைத்து வேலைவாங்க அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தப் பிரச்னை கோர்ட்டுக்கு விடப்பட்டிருக்கிறது.

*Amount due to the Tanjore District Board from the Raliway Funds.*

* 591 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the District Board of Tanjore has received its due share of Railway Funds from the Central Government;

(*b*) if so, the amount received; and

(*c*) the person to whom this amount is being entrusted now as there is no district board at present?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir. Rs. 1,75,18,794 (Rupees one hundred seventy-five lakhs eighteen thousand seven hundred and ninety-four).

(*c*) The amount is held in deposit by the Government of Madras.

SRI A. V. P. ASAITHAMBI : இந்த ரயில்வே நிதி எதற்காக என்று அமைச்சர் அவர்கள் விளக்க முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சாவூர் ஜில்லாவில் அந்த ஜில்லா போர்டுக்குச் சொந்தமாக ரயில்வே கொஞ்சம் இருந்தது. அதன் நிர்வாகம் ரயில்வே போர்டால் நடத்தப்பட்டு வந்தபோது அதில் கொஞ்சம் விகிதாசாரம் அந்த ஜில்லா போர்டுக்காக ஒதுக்கப்பட்டது. தங்கள் உரிமையை ஜில்லா போர்டார் ரயில்வே போர்டினிடமே கொடுத்துவிட்டதால் ஆண்டுதோறும் அவர்களுக்கு கூடிவந்த தொகையை எல்லாம் கணக்குப் போட்டு இந்தத் தொகை கொடுக்கப்படுகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, how they propose to utilize this amount?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Now the Government which holds the amount in deposit proposes to pay 4 per cent interest to the District Board. There have been so many proposals to utilize the amount including the proposal to start a medical college in Tanjore. If the hon. the Leader of the Opposition would put a separate question to my Hon. Colleague the Minister for Local Administration, she might perhaps be able to answer that question in detail.

SRI A. VEDARATHNAM : இதற்கு முன்னிருந்த ஜில்லா போர்டார் அந்தத் தொகை பற்றி எந்த முறையில் செலவிடவேண்டும், எந்த எந்த இனத்திற்குச் செலவிடவேண்டுமென்று ஏதாவது தீர்மானம் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்களா ? அப்படியானால் அந்த விவரம் என்ன ? அதைப்பற்றி அரசாங்கம் என்ன முடிவு செய்திருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லா போர்டு சில யோசனைகளைச் சொல்லியிருக்கிறது. அதைப்பற்றிய விவரங்கள் என்னிடம் இல்லை.